# பயிலரங்கக் கவிதைகள்

முனைவர் ச. சிவகாமி




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

# பயிலரங்கக் கவிதைகள்


பதிப்பாசிரியர்

முனைவர் ச. சிவகாமி






உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

**International Institute of Tamil Studies**

*C.I.T. Campus, Tharamani,*

*Chennai - 600 113*

# BIBLIOGRAPHICAL DATA



| | | |
|---|---|---|
| Title of the Book | : | Payilaraṅkak kavitaikaḷ |
| Editor | : | Dr. S. Sivakami<br>Associate Professor<br>International Institute of Tamil Studies<br>Taramani, Chennai - 600 113. |
| Publisher | : | International Institute of Tamil Studies<br>Taramani, Chennai - 600 113. |
| Publication No | : | 373 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Date of Publication | : | 2000 |
| Paper Used | : | 18.6 kg TNPL Super Printing |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type Used | : | 16 point |
| No. of Pages | : | 65 + xv pages |
| No. of Copies | : | 1,200 |
| Price | : | Rs. 18/- |
| Printing | : | United Bind Graphics<br>101-D, Royapettah High Road,<br>Mylapore, Chennai - 600 004. |
| Subject | : | Collection of Poems |

This work is published with the financial support of the Poetry Society (India), New Delhi.

# FOREWORD

Poetry should flourish with its myriad facets anywhere a poet is born and where a poet dives into its deep recesses in order to express, as others don't, a rational or a higher message in a particular context. Poets flourish only if they are in the midst of the deep reservoir of creativity and have a fair control over the language so that they are able to express well.

Creativity needs to be nurtured at a very young age and also the mastery of the craft of writing poetry. The curricula the students adopt is so complex that in general creativity suffers and there is no time to master the craft of writing. Thus as students grow as young men in various professions their lives are solidified with a vision of the material world and not of the subtle realms of consciousness. It was with this concern in mind that the Poetry Society (India) in collaboration with the Department of Education, Ministry of Human Resource Development, Government of India started organising creative writing workshops for students writing in various languages in different parts of India.

The Poetry Society (India) has so far organised creative writing workshops in the states of Punjab, Haryana, Rajasthan, Madhya Pradesh, Orissa, West Bengal and Karnataka. This year we have been holding such workshops in Tamilnadu, Himachal Pradesh and Orissa. We hope to continue organising such workshops in different parts of India in the years to come.

We are grateful to the International Institute of Tamil Studies in particular Dr. S.S. Ramar Ilango, its Director, for collaborating with the Poetry Society (India) in organising the creative writing workshop in Tamil Nadu. We are grateful to Dr. S.S. Ramar Ilango, the well-known poets of Tamil Nadu and his colleagues who helped him in making this workshop a success.

**H.K. Kaul**
Secretary - General
The Poetry Society (India)
L-67A, Malviya Nagar
New Delhi - 110 017.

**முனைவர் ச.சு. இராமர் இளங்கோ**
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி, சென்னை 600 113

# அணிந்துரை

படிக்கும்போதும் கேட்கும்போதும் ஆராயும்போதும் இன்பம் பயப்பது கவிதை. எனவே கொள்ளை இன்பம் குலவு கவிதை எனக் கவிதை பாராட்டப்பெறுகிறது.

கவிதை இனிமையானது. சொல்லும் திறத்தால் பயிலும்போதெல்லாம் புதுப்புதுப்பொருளைத் தருதலால் கவிதை புதுமையுமானது.

நவில்தொறும் நயம்காட்டும் இக்கவிதையின் தொன்மை, தோற்றம் நம்மால் தெளிவாக அறுதியிட்டுக் கூறமுடியாவிடினும் தமிழ்க் கவிதை நீண்ட நெடிய வரலாறு உடையது என்பது உண்மை. இலக்கியம் கண்டு அதற்கு இலக்கணம் இயம்பும், தமிழின் தொன்மை நூலாக இன்று தெரியவரும் தொல்காப்பியம் தம் காலத்திற்கு முன்னைய கவிதையின் வரலாற்றைச் சிறப்புற எடுத்தியம்பும் இலக்கண நூல். கவிதையின் வகைகள், அதன் அழகுகள், அதன் உறுப்புகள், அதன் வேறுபாடுகள், அதன் நயங்கள், அதன் சுவைகள் என, கவிதையின் ஒவ்வொரு கூறையும் கவிதையின் பாடுபொருள் கூறுகளையும் தெள்ளத் தெளிவாகச் சொல்லிச் செல்லும் தன்மையில் தொல்காப்பியர் இன்று பாவியல் பேராசானாகக் கருதப்படுகிறார். இப்பெருமை தொல்காப்பியத்தின் சிறப்பை மட்டும் உணர்த்தவில்லை. தொல்காப்பியர் காலத்திலும் அவருக்கு முந்தைய காலத்திலும் தமிழ்க் கவிதை பெற்றிருந்த வளத்தையும் சிறப்பையும் வெளிப்படுத்தவும் துணையாகிறது.

பாட்டு, பாடல், செய்யுள், கவிதை போன்ற பல சொல் ஒரு பொருளாக அமைந்து, சிறந்த தொடர்களில் எளிய ஆழமான சொற்களால் பற்பலப் பொருட்களைத் தந்து நின்ற இக்கவிதைகள் அந்தந்தக் காலச் சூழலுக்கு ஏற்பத் தனிப்பாடல்களாகவும், காப்பியங்களாகவும், பக்திப் பாடல்களாகவும், சிற்றிலக்கியங்களாகவும் விரிந்தன. இங்ஙனம் உள்ளடக்கங்களில் மாற்றம் ஏற்பட்டதன் விளைவாக யாப்பு வடிவங்களும் மாறின. இருபதாம் நூற்றாண்டில், மரபுக்கவிதை, புதுக்கவிதை என வளர்ந்தன.

மரபுக் கவிதை, புதுக்கவிதை என எந்தக் கவிதையாயினும் சிறந்த கவிதைகள் காலத்தை வென்று நிற்கும். இச்சிறப்புக்கு மொழிப்பயிற்சி மிகவும் முக்கியமானது. மொழி மிக்க ஆற்றலுடையது. ' மந்திரம்போல் வேண்டுமடா சொல்லின்பம் ' என்பார் பாரதியார். இதன் தொன்மையைத் தொல்காப்பியரின்,

'நிறைமொழி மாந்தர் ஆணையிற்கிளந்த
மறைமொழிதானே மந்திரம் என்ப '

என்பதில் காணலாம். இத்தகைய மந்திரச் சொற்கள் கவிதைச் சொற்களாக மலரும்போது வெளிப்படும் இலக்கியங்கள் அமரத்துவம் பெறுகின்றன.

'சொல், பொருள், உணர்வு, வண்ணங்கள் தொடர்ந்து குற்றமின்றி, அவை தத்தமுள் தவழும் கோள் உடையவாய் இன்பம் பெருக்கி, அம்மை முதலான வனப்பலங்காரமும், செம்மையும் செறிவும் பெறுவழிப் பெற்று, இம்மை மறுமைக்கு நன்மை பயந்து, எல்லார்க்கும் பலனுற நடைபெறுவது யாப்பு, பாட்டு, செய்யுள் என்று சொல்லப்படுவதாயிற்று' என, பழைய யாப்பருங்கல விருத்தியுரைகாரர் கவிதைக்கு இலக்கணம் தருகின்றார்.

கம்பன் கவிதையின் சிறப்பைப் பின்வரும் பாடலில் விளக்குகிறார்.

'புவியினுக்கு அணியாய் ஆன்றபொருள் தந்து புலத்திற்றாகி
அவியகத் துறைகள் தாங்கி ஐந்திணை நெறியளாவி
சவியுறத் தெளிந்து தண்ணென்று ஒழுக்கமும் தழுவிச்
சான்றோர் கவியெனக் கிடந்த கோதாவரி'

என நதியையும் கவிதையையும் ஒப்பிடுகின்றார்.

மேலும் பாரதியார்,

'சுவை புதிது, பொருள் புதிது, வளம் புதிது,
சொற் புதிது, சோதி மிக்க
நவகவிதை யெந்நாளுமழியாத
மகாகவிதை'

என்று, காலத்தை வென்று வாழும் கவிதை பற்றிக் கூறுகிறார்.

புரட்சிக்கவிஞன் பாரதிதாசன் கவிதை என்பது அறிவில் சிறந்தவர்கள் பல சொற்கள் வைத்து அழகு அமைய ஒரு பொருள் பற்றிப் பாடுவது என்று குறிப்பிட்டுள்ளார். மேலும் ஒளிவிளக்கு இருளை

அகற்றும்; கவிதை மாந்தரின் அக இருளை அகற்றும் என்றும் சுட்டியுள்ளார்.

பாட்டின் உபயோகத்தைச் சொல்ல வேண்டுமானால், நன்றாக அமைந்த பாடல் தன் கருத்துப்படி மனிதனைத் திருப்புகிறது. இது தான் பாட்டினிடத்தில் உள்ள குறிப்பிடத்தக்க மேன்மை என்று புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் கூறிய கருத்தும் இங்கு நினைக்கத்தக்கது.

கவிதையைத் தன்னுணர்ச்சிப் பாடல்கள், கதைகூறும் பாடல்கள், கவிதை நாடகங்கள் என மூன்று வகையாகப் பிரிப்பர். முதலாவதாகக் சுட்டப்பெறும் தன்னுணர்ச்சிப் பாடல்கள் சுருக்கமாகவும் ஒரு பொருள் பற்றி எழுதப்பட்டதாகவும் அமைந்திருக்கும். பாரதியார், பாரதிதாசன் போன்றோர் ஒரு பொருள் பற்றி எழுதிய பாடல்களை இவ்வகைக்கு எடுத்துக்காட்டாகச் சுட்டலாம். இரண்டாவதாகக் கூறப்படும் கதைகூறும் பாடல்கள் கதை வடிவில் அமைந்திருக்கும். ஐம்பெரும் காப்பியம், ஐஞ்சிறு காப்பியம், கம்பராமாயணம், பெரியபுராணம், பாஞ்சாலி சபதம், சஞ்சீவி பர்வதத்தின் சாரல், புரட்சிக்கவி போன்றவற்றை இவ்வகைக்கு எடுத்துக்காட்டாகக் கூறலாம். மூன்றாவதாகச் சுட்டப்பெறும் கவிதை நாடகத்திற்கு மனோன்மணியம், வீரத்தாய் போன்றவற்றை எடுத்துக்காட்டாகக் கூறலாம்.

சிறந்த கவிதைகளாகிய இலக்கியச் செல்வங்கள் ஓரினத்தின் ஆற்றலையும் மேம்பாட்டையும் தொன்மையையும் வெளிக்கொணரும் சக்தி வாய்ந்தவை: வரலாற்று முழுமையை உருவாக்கத் துணை நிற்பவை. இத்தகைய கவிதைகளின் முக்கியத்துவத்தில் கவிஞர்களின் முக்கியத்துவமும், முக்கியத்துவத்துடன் அணுகப்படவேண்டிய ஒன்று. நல்ல படைப்பாளிகள் இல்லையேல் நல்ல கவிதைகள் இல்லை. தெளிந்த அறிவு, கற்பனை ஆற்றல், ஆழ்ந்த சிந்தனை, சிறந்த சொற்தேர்ச்சி, சிறப்புறத்தரும் உத்திகள் போன்றன காலத்தை வென்று நிற்கும் கவிதைகளைக் கவிஞர்கள் தரக் காரணமாகின்றன. எனவே தான் குமரகுருபரர் தன்னுடைய நீதிநெறி விளக்கத்தில் படைப்பாற்றல் மிக்க கவிஞர்கள் பிரம்மதேவனைக் காட்டிலும் மேலானவர்கள். பிரம்மதேவன் படைப்புக்களான உடல் அழிகிறது. ஆனால் கவிஞர் படைப்புகள் காலத்தை வென்று வாழ்கின்றன என்று கூறுகின்றார். நன்னூலார், கவிஞரின் படைப்புத் திறனை,

'பல்வகைத் தாதுவி னுயிர்க்குடல் போல்பல
சொல்லாற் பொருட் கிடனாக வுணர்வினின்
வல்லோரணி பெறச் செய்வன செய்யுள்'

எனச் சிறப்பிப்பார்.

இறைவன் அருளால் 'கவிஞர்கள் பிறக்கிறார்கள்' என்று கவிஞர் பிறப்புக்குத் தெய்வீகச் சார்பு சிலர் கற்பிக்கலாம். எனினும் அறிவியல் அடிப்படையில் மேலும் சில காரணங்களைச் சுட்டலாம். கவிஞர்களின் முயற்சி முதல் தேவை. அடுத்துச் சரியான சூழலும் ஊக்கப்படுத்தலும் தேவைப்படுகின்றன. விளக்கில் திரி போன்று இவர்களுள் மறைந்து கிடக்கும் ஆற்றலை வெளிக்கொணரும் சூழலை உருவாக்கிக்கொடுக்கும் நிலையில் பல கவிஞர்களை உருவாக்குதல் இயலும். இந்த அடித்தளத்தில் பிறந்ததே இக்கவிதைப் பயிலரங்கம்.

இக்கவிதைப் பயிலரங்கம் இந்திய கவிதையியல் கழகத்தின் நிதி உதவியோடு இந்நிறுவனத்தில் நடைபெற்றது. நிதி நல்கியவர் இந்தியக் கவிதை இயல் கழகத்தின் செயலாளர் டாக்டர் கவுல். இக்கவிதைப் பயிலரங்கில் இளம் கவிஞர்களாகத் தங்களை இனம் காட்டத்தக்க நல்ல பல கவிதைகளை வடித்துத் தந்தனர் பயிலரங்கப் பயிற்சியாளர்கள். இவர்களது கவிதைகள் இங்கு நூலாக்கம் செய்யப்பட்டு வெளிவருகிறது.

இப்பயிலரங்கம் சிறப்புற நடத்தப்பட்டு இளம் கவிஞர்கள் தம் கவிதைத் திறன்களை வெளிப்படுத்த தளம் அமைத்துக்கொடுத்த டாக்டர் கவுல் அவர்களுக்கும் இப்பயிலரங்கினைச் சிறப்பாக நடத்தி இந்நூலை வெளிக்கொணர்ந்த முனைவர் ச. சிவகாமி அவர்களுக்கும் நன்றி.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் காட்டிவருகின்ற நிறுவனத் தலைவர் மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி - பண்பாடு மற்றும் இந்து சமய அறநிலையத் துறை அமைச்சர் முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி பண்பாடு மற்றும் அறநிலையத்துறைச் செயலாளர் திரு. சு. இராமகிருட்டிணன் இ.ஆ.ப அவர்களுக்கும் எங்கள் நன்றி.

இந்நூலினை நல்லமுறையில் அச்சிட்டுத்தந்த யுனைடெட் பைண்டு கிராபிக்ஸ்க்கும் எங்கள் நன்றி.

இயக்குநர்

# பதிப்புரை

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் இந்தியக் கவிதையியல் கழக நிதிநல்கையுடன் அக்டோபர் 25, 26, 27 ஆகிய மூன்று நாட்களுக்கு 15 முதல் 19 வயதிற்குட்பட்ட மாணவர்க்காக, கவிதையாக்கப் பயிலரங்கு ஒன்றினை நடத்தியது. மேனிலைப் பள்ளி மற்றும் கல்லூரிகளைச் சார்ந்த 64 மாணவ மாணவியர் இதில் பங்கேற்றனர். 25-10-99 அன்று காலை பதினொரு மணியளவில் கவிக்கோ அப்துல்ரகுமான் தலைமையில் கவிதையாக்கப் பயிலரங்கிற்கான தொடக்கவிழா தொடங்கியது. இந்தியக் கவிதையியல் கழகப் பொதுச் செயலாளர் முனைவர் எச்.கே. கவுல் தொடக்கவுரை ஆற்றினார். தமிழகத்தில் முதன்முதலில் இப் பயிலரங்கு உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில்தான் நடைபெறுகிறது என்று சுட்டிக்காட்டிய அவர், இதற்கு முன் இந்தியாவின் பிற இடங்களில் நடந்த கவிதையாக்கப் பயிலரங்கில் பங்கேற்ற மாணவர்களின் சிறந்த கவிதைகளை அறிமுகம் செய்து இப்பயிலரங்கிற்கு வந்திருந்த மாணவர்களுக்கு உற்சாகமூட்டினார். இப்பயிலரங்கில் தேர்வு செய்யப்படும் சிறந்த கவிதைகளும் நூலாக்கம் செய்யப்பெறும் என்று ஊக்கமளித்தார்.

கவிஞன் எப்படிப் பிறக்கிறான், எப்போது பிறக்கிறான், கவிதை எங்கே எப்படி மலருகிறது என்று கவிதைக் கலையின் ஆழ அகலங்களைக் கவிக்கோ தலைமையுரையாகத் தந்தார். இயல்பாகவே கவிஞனாகப் பிறக்கும் குழந்தை காலப்போக்கில் கல்விச் சூழலால் தடமாறுவதைக் குறிப்பிட்டு, வந்திருந்த மாணவர்கள் அதிலிருந்து விடுபடற்குரிய வழிகாட்டினார். பின் கவிஞர் மேத்தா வாழ்த்துரை வழங்கினார். கவிஞனின் கடமையை வலியுறுத்திய அவர் கவிதை படைப்பதால் கவிஞன் பெறும் பயனையும் சுட்டிக் காட்டினார். அனுபவம் கவிதையாதல்ல அழகுற வெளிப்படுத்தி இளங்கவிகளை வாழ்த்தினார்.

இறுதியில் கவிஞர் இன்குலாப் சிறப்புரையாற்றினார். கவிதையின் பன்முகங்களையும் அவற்றின் பலவிதப் பயன்களையும் திறனாய்வுக் கண்ணோட்டத்தில் தந்த அவர் கவிதை எப்படியிருக்க

வேண்டும் என்பதையும் வலியுறுத்தினார். கவிதையின் ஊற்று வாழ்க்கை தான் என்பதையும் எடுத்துரைத்தார்.

இம்மூன்று நாள் பயிலரங்கிற்கு ஒவ்வொரு நாளும் பெருங் கவிஞர் ஒருவர் பொறுப்பேற்று நடத்தினர். முதல்நாள் கவிக்கோ அப்துல்ரகுமான், இரண்டாம் நாள் கவிஞர் சிற்பி, மூன்றாம் நாள் கவிஞர் தமிழன்பன் ஆகியோர் இப்பணியைத் திறம்படச் செய்தனர். முதல்நாள் பொறுப்பேற்ற கவிக்கோ மலரத் துடிக்கும் இளங்கவி களுக்கான பாடத்திட்டம் ஒன்றினை - கண்டிப்பாகப் பயில வேண்டிய கவிதை நூல்களைத் தமிழ் மொழியினின்றும் பிற மொழி களினின்றும் தொகுத்துரைத்தார். இவர்களுக்குத் துணையாகக் கருத்துகளைக் கவிஞர் பொன். செல்வக் கணபதி, கவிஞர் அறிவுமதி, கவிஞர் நிர்மலா சுரேஷ், கவிஞர் மின்னூர் சீனிவாசன் ஆகியோர் நவின்றனர்.

தங்களது கவிதையனுபவங்களை, தாங்கள் சுவைத்த கவிதைகளைத் தந்து கவிதை உருவாக்கத்தில் நுணுக்கமாகக் கருத்தில் கொள்ள வேண்டிய செய்திகளைத் தமது நோக்கில் ஒவ்வொருவரும் எடுத்துரைத்தனர். கவிதைக்குக் கற்பனைதான் ஊற்று எனக் கவிக்கோ தெளிவுபடுத்தினார். தற்குறிப்பேற்றத்தின் தகவுகளைக் கவிஞர் பொன். செல்வக் கணபதி வெளிப்படுத்தினார். கவிதை மரபுகளைத் தெரிந்து கொள்ள வேண்டியதன் தேவையைக் கவிஞர் சிற்பி விளங்க வைத்தார். கவிதைச் சொல்வளத்திற்குச் சிறப்பளித்தார். சங்கப்பாக்களின் செறிவும், நாட்டுப்புறப் பாடல்களின் எளிமையும், பேச்சுமொழியும் கவிதை உருவாக்கத்திற்கு அடிப்படையாகக் கவிஞர் அறிவுமதி அறிவித்தார். ஹைக்கூ கவிதைகள் எப்படி அமைய வேண்டும் எனக் காட்டிய கவிஞர் நிர்மலா சுரேஷ், கவிதையின் பாடுபொருளை அதன் எல்லாப் பரிமாணங்களிலும் நுணுகி ஆய்ந்து தெளிந்தபின் கவிதை படைக்க வேண்டுமென வழிகாட்டினார்.

கவிதைக்குள் கவிதை பிறக்கும் அழகையும், நிகழ்ச்சிகள் கவிதைகளாக உருவாகும் பாங்கையும் தெளிவுபடுத்திய கவிஞர் தமிழன்பன் தன்னுணர்வின் இன்றியமையாமையும் இயம்பினார். சொற்சிலம்பம் கவிதையைச் சிறப்பிப்பதைச் சுவைப்படத் தந்தார். கவிதையில் இடம்பெறும் சொற்கள் கவனமாகத் தேர்வு செய்யப்பட வேண்டும் என்று வலியுறுத்திய கவிஞர் மின்னூர் சீனிவாசன் அச்சொற்கள் எப்படிக் கவிதைக்கு இன்றியமையாதவையாய் அமைந்து கவிதையைப் பெருமைப்படுத்துகின்றன; அதன் நோக்கைத் தெளிவுபடுத்துகின்றன என்பதையும் விரித்துரைத்தார்.

இங்ஙனம் கவிதையின் பலவித பரிமாணங்களையும் கோணங்களையும் காட்டி இளங்கவிகளின் உள்ளத்தில் கவித்தீபம் ஏற்றிய கவிஞர்கள், அலைகள் ஏன் ஓய்வதில்லை, கடல், கடிகாரம், தாய் வேலைக்குச் செல்வதால் ஏற்படும் சிக்கலை ஒவ்வொரு உறவின் பார்வையினின்று என்பன போன்று தலைப்பு மற்றும் சூழல்கள் கொடுத்து அவரிடையே கவிதை உருவாக்கம் வேண்டினர். வெளிப்பட்ட அப்படைப்புகளினின்றும் விருந்தாயன அம்மூத்த கவிஞர்களால் தேர்வு செய்யப்பட்டு உடனுக்குடன் வாசிக்கப்பட்டுப் பாராட்டப்பெற்றது மாணவர்களுக்குப் பெரிதும் உற்சாகமும் தூண்டலும் அளித்தது. கவிஞர் சிற்பியும், கவிஞர் அறிவுமதியும் தங்களது கவிதைப் போட்டியில் வென்ற மாணவர்களுக்குப் பரிசளித்துச் சிறப்பித்தமையும் கூறத்தக்கது.

கவிதைப் படைப்பாளர்க்குத் திறனாய்வுப் பார்வையும் தேவை; மற்றும் தற்காலக் கவிதைப் படைப்பில் முன்னிற்கும் படிமம், உவமம், அங்கதம், முரண் ஆகியன பற்றியும் உணர்த்த வேண்டும் என்ற நோக்கில் திறனாய்வாளர் கருத்துரைகளும் இப்பயிலரங்கில் இடம் பெற்றன. முதல்நாள் முனைவர் சுதந்திரமுத்து படிமம், உவமம் பற்றி விளக்கவுரையாற்ற இரண்டாம் நாள் முனைவர் இராம. குருநாதன் அங்கதத்தையும் முரணையும் அலசினார். இருவுரைகளும் மாணவர்களுக்கேற்ப எளிமையும் தெளிவும் கொண்டமைந்தன. இரண்டாம் நாள் 2ஆம் அமர்வு வி.ஜி.பி. தங்கக் கடற்கரையில் அமைந்து மாணவர்களுக்குக் களிப்பூட்டியது.

மூன்றாம் நாள் நடந்த நிறைவு விழாவிற்குக் கவிஞர் தமிழன்பன் தலைமையேற்றார். முதுபெருங் கவிஞரான உவமைக் கவிஞர் சுரதா அவ்விழாவில் சிறப்புச் செய்ய பெற்றார். கவிதையாக்கப் பயிலரங்கில் பங்கேற்ற மாணவர்களுக்கு அவர் சான்றிதழ் வழங்கினார். பயிற்சியில் தேர்வுபெற்ற கவிதைகள் அதன் படைப்பாளரால் படிக்கப்பெற்றன. கவிஞர் சிற்பி பாலசுப்பிரமணியன் தம் நிறைவுரையில் கவிஞர்கள் சமூக விழிப்புணர்வோடு கவிதை படைக்க வேண்டியதை, கவிஞர்கள் எப்படியிருக்க வேண்டுமென்பதைத் தம் அறிவுரையாக முன்வைத்துப் பயிலரங்கினை இனிதே நிறைவு செய்தார். பயிற்சி பெற்ற இளங்கவிகள் மிகுந்த எழுச்சியுடனும், தன்னம்பிக்கையுடனும் மன நிறைவுடனும் சென்றது இக்கவிதையாக்கப் பயிலரங்கின் பயனாய் அமைந்தது. தேர்வு செய்யப் பெற்ற கவிதைகள் விரைவில் நூலாய் வெளிவரும் என உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர்

முனைவர் ச.சு. இராமர் இளங்கோ உறுதியளித்தார். தொடக்க விழா மற்றும் நிறைவு விழாவில் நிறுவன இயக்குநர் அனைவரையும் வரவேற்றுப் பேசினார். இறுதியில் இப்பயிலரங்கத்தின் நிறுவனப் பொறுப்பாளர் முனைவர் ச. சிவகாமி நன்றி கூறினார்.

இயக்குநர் அளித்த உறுதிக்கேற்ப தற்பொழுது, தேர்ந்த கவிதைகளின் தொகுப்பாக நூல் வெளிவந்துள்ளது. சிறந்த கவிதைகளைத் தேர்ந்தளித்த கவிக்கோ அப்துல் ரகுமான், கவிஞர் சிற்பி பாலசுப்பிரமணியம், கவிஞர் தமிழன்பன் ஆகியோர்க்கும், நூலாக்கத்திற்குத் துணை நின்ற நிறுவன இயக்குநர் முனைவர் ச.சு. இராமர் இளங்கோ, கணினி பொறிஞர்கள் திருமதி ந. லட்சுமி, திரு. ஸ். கோபிநாத் ஆகியோர்க்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ச. சிவகாமி

நெருக்கமாய் வாழ்கிறோம்
இயற்கையோடு
கூரைக்குள் மழை

பெய்யும் மழை
கழுவும் என்றிருந்தால்
சுவரெல்லாம் கறை

ஒன்றாக்கும் மழை
குடைக்குள்
இருவர்

**- அ. உபயத்துல்லா பேக்**

உழவன் உழுவதற்காக
இறைவன் அழுகிறான்

பொழிந்தால்
அழிந்துவிடும் - ஏழைகளின்
சருகு மாளிகைகள்

அழுக்கேறிய
உலகுக்கோர்
வாட்டர் சர்வீஸ்

- இரா. கோகுலவாச நவநீதன்

ஆந்திராவும் கர்நாடகமும்
கைகொடுக்க மறுத்தன
கைகொடுத்தான் இந்திரன்

- ஜெ. குருமூர்த்தி

மழை தாரையாய்
புறநகர்க்குள் கொட்டினால்
கிட்டும் ஒரு குடம்
மிஞ்சும் ஐந்து மைல் நடை

- ச. ரேவதி

மாதங்கள் பலவாயின
சோறுண்டு
மழை இல்லாததால்
எமச்சான் கிணற்றில் தூறு
எடுக்கச் சென்றான்
இன்று
எங்கள் தலைவிதியை
மாற்றவந்த மழை
என் தாலியைப் பிடுங்கியது
வெள்ளமாக மாறி.....

- இல. விக்டோரியா

சீவி சிங்காரிச்சி
சின்னதா ஒரு பொட்டும் வச்சி
உச்சியிலே பொட்டு ஏறும் நேரம்
இந்திரனின் ஆயிரம் கண்ணும் அழுததுபோல
பெய்தது மழை!
மின்னல் இறங்கியது போல
பளிச்சின்னு மாப்பிள்ளை இறங்க
பின்னாலே
இடியென மாமியார் சொற்கள்
வானவில்போல வளைவாக ஒரு
ஒட்டியாணம் போடலியாம்
மழைத்துளி அளவில் ஒரு
வைரத்தோடு செய்யலியாம்
தூவானம் போட்ட மழை
புயலாகிறது!
மழை மட்டுமா? மாமியின் வார்த்தையும்தான்
கடைசியில் நின்றது மழை
நின்றது மழைமட்டும் தானா?

- த. வனிதா தேவி

பாவத்தைக் கங்கையிலும்

கூவத்தைக் கடலிலும்

கரைத்துவிடுகிறான் மனிதன்!

உப்பைத் தரும் கடலுக்கு

குப்பை நீரைத் தரலாமா?

குடிதண்ணீர் குளத்திலே

குளித்துத் துவைப்போரைக்

கடிந்து கொண்டு

கூவம் மேவும் கடற்கரையில்

கால் நனைப்பவனே! - கடலன்னை

கூவம் வேண்டாமெனக் கூவும் ஓசை

கேட்கிறதா உனக்கு?

- இரா. கோகுலவாச நவநீதன்

கடல்

வானத்தின்

உடைந்த கண்ணாடி

- எல். அப்துல்ரஷீத்

அறைக்குள் வந்து உதறினேன்
தரையெல்லாம்
கடற்கரை

**- அ. உபயத்துல்லா பேக்**

மீனவர்களின்
அட்சயப் பாத்திரம்
படகோட்டியின்
தார் சாலை

- மே. ஜானகிராமன்

கடலே!

உன்னை நீ பாதுகாத்துக் கொள்!

ஏமாந்தால்,

உன்னைக் கூட பிளாட் போட்டு விற்பார்கள்.

- மா. சண்முகவள்ளி

பூமிச் சுவடுகளில் என்னதான்
எழுதிக் கொண்டு இருக்கின்றாய்!
இரவு பகல் பாராமல்
ரகசிய ஃபார்முலாவா!
எழுதியதை உடனே அழித்துவிடுகின்றாய்
உன்னுள் கிடக்கும் ரகசியத்தை
வானில் தூதுவிட்டு பார்க்கும் நாளில்
எழுதுவதை நிறுத்தி
மேலே பார்! எத்தனை
செயற்கை கோள்கள்
நீ எழுதுவதைப் படித்துக்
கொண்டிருக்கின்றன.

- ஆர். குமார்

வாளிவாளியா தண்ணி வைத்திருக்கான்
குடிக்க தண்ணி கேட்டா
உப்பு போட்டுத் தரான் கருமி!
சூரியன் புடுங்கித் தந்தாத்தான் உண்டு.

**- நா. சேதுக்கரசி**

கடலே,

என் சோகத்தைச் சொல்ல
உன்னிடம் ஓடி வந்தேன்
வந்த பிறகு தான் தெரிந்தது
நீயும் உன் சோகத்தைச்
சொல்ல ஆள் தேடி
ஓடிக் கொண்டிருக்கிறாய் என்று

- ச. சுபாஷினி

அத்தையே!

நான் உன் மாட்டுப் பெண்தானே!

என் நாட்டுப் பெண்களை

வார்த்தைகளாலே கொல்கிறாயே!

நான் வாயைத் திறந்தால்

நீ அம்மியில் அரைபடும் மசாலாவாகிவிடுவாய்!

– சி. சாந்தநாயகி

அலைகளுக்கும்
உணர்ச்சிகள்
உண்டு போலும்
கடல் மன்றத்தில்
நீதி கேட்டு
அலைகின்றன
அலைகளே!
நீதி பொய் சொல்லும்
மனிதருக்குத்தான்
உமக்கல்ல...

- எல். அப்துல்ரஷீத்

இதற்கும் ஓர் ஆசை
புதியதோர்
உலக சாதனை புரிவதற்கு

- **தீ. தசரதன்**

அலைகள் கடலின் இதயத்துடிப்பு
நின்றால் அழிந்துவிடும் கடல்

- ப. சிவக்குமார்

அலைகள் ஒய்வதில்லை - வேலையில்லா
பட்டதாரிகளைப்போல!
பாவம்! நேரம் கிடைத்தால்தானே
ஒய்வெடுக்க!

- செ. ஜெ. சுபா

அலை கூட்டம்

கரையில் படிந்திருக்கும்

மனிதர் கறைகளை

சலவை செய்கிறதா? இல்லை

கரைச் சிறையிலிருந்து

சுதந்திரம் கேட்டுக்

கலகம் செய்கிறதா?

- சார்லஸ்

மனிதர்கள் சுயநலக்காரர்கள்
அவர்களைப் பார்க்கவே
என்னைப் பார்க்கிறார்கள்!
நானோ அவர்களின் புறசாட்சி!
நிஜத்தைக் காட்டினால்
என்னை உடைக்கிறார்கள்
உடைந்தாலும் நான்
அவர்களையே காட்டுகிறேன்

- சார்லஸ்

கண்ணாடியின் முன் நின்றேன்
வெறுப்பு வந்தது
கண்ணாடியின் மீது

- ஆர் ஸ்ரீதரன்

பின்னாடி செய்யும் தவறுகளை
முன்னாடி எடுத்து வைக்கும்
ஓர் அற்புதப் புத்தகம்

அவள் அழகை
வாய்மையோடு
கூறும் தோழி - கண்ணாடி!

- ச. தனஞ்செயன்

உங்களை விடப்

பெரிய முட்டாளைப்

பார்க்க வேண்டுமா?

என்னைப் பாருங்கள்!

- இரா. கோகுலவாச நவநீதன்

உடைந்தும் உருவம் பார்க்கலாம்
என்னில்
தெரியும் உருவங்கள் ஆயிரம்

- இ. நந்தமிழ் நங்கை

"முப்பத்தைந்து ஆண்டாகிறது நான் வருகைதந்து
நான்வந்த இரண்டாண்டு கழிந்து
உன் வருகை
இன்று வரை நான் இங்கு இருக்கிறேன்.
பெண்ணே!
நீயும் தான்.
சிறுவயதில் என்னிடம் உன்னைக் காட்ட
மறுத்தாள் அன்னை
பின்னாளில் நீயே வந்தாய்
சற்று கறுப்புதான்
உன் பதினெட்டாம் வயதுமுதல் நீ என்னைவிட்டு
நகரவில்லை
பனிபோல் கரைந்தது வயது
காட்சி பொம்மையாய் எத்தனை தரம்
நின்றிருப்பாய்?
என் முன்னும், வந்தவர் முன்னும்
அடி பெண்ணே!
எனக்கு உயிர்என ஒன்று இருந்திருந்தால்
நானேனும் உன்னை மணந்திருப்பேனே!"

- த. வனிதா தேவி

பள்ளிக் கூடத்துக்குப் போகயிலே
தினந்தோறும் பவுடர் பூசி
எண்ணை தேய்ச்சு
தலை சீவி
இந்தா ராசா கண்ணாடி பாருனு
எங்க ஆத்தா காட்டுவா

கண்ணாடிய பார்த்துபுட்டு
போ ஆத்தா என் மூஞ்சு நல்லாயில்லேனு
நான் அழுவேன்

வளர்ந்த பின்பு
நான் யாருகிட்ட
போய் அழுவேன்
என்னை நானே திட்டிக்குவேன்
இத்தனை நாளா நான்
பேசுறத கண்ணாடி பேசும்
திடீர்னு ஒரு குரல் கேட்டுது
கண்ணாடி எங்கிட்ட பேசுச்சு
நீ உன்னை என்னுல பாத்தினா
உன் முக அழகுதான் தெரியும்
நீ உன்னை உன்னுள்ளே பாத்தினா
உன் மனசழகு தெரியுமுனு

- கு. சங்கீதா

உன்னை
என்னில் பார்க்கிறாய்
என்னை
எதில் பார்ப்பது?

யாரங்கே!
ஒரு திரையைக் கொண்டு வாருங்கள்
அந்தப் பார்வையற்றவன்
கடப்பதற்கு முன்
என்னை மூடிக் கொள்கிறேன்

- இரா. மிதிலா

நான் பிறக்கும் முன்பு இருந்த கண்ணாடி
நான் பிறந்த பின்பும் இருந்த கண்ணாடி
எனக்குச் சீதனமாய் கொடுத்த கண்ணாடி
நான் அமங்கலியாக ஆகிவிட்டேன்
இன்றும் இருக்கிறது கண்ணாடி சுமங்கலியாக
பொட்டு ஒட்டப்பட்ட படி

- நா. பவானி

இந்த வளையல் எனக்கு அழகா
இருக்கான்னு அக்கா கேட்டா
இந்த மூக்குத்தி நல்லா
இருக்கான்னு அம்மா கேட்டா
அங்கவஸ்தரம் நல்லா
அமைஞ்சிருக்கான்னும் அப்பா கேட்டா
நீ நல்லா இருக்கியான்னு
யாருமே கேக்கல

- நா. சேதுக்கரசி

"அம்மா அதென்னமா?"

"கடிகாரம் ராசா."

"அதுயேம்மா நம்ம கிட்ட இல்லை"

"அதெல்லாம் மணிக்கு ஓடரவங்களுக்கு

நம்ம மாதிரி பசிக்கு ஓடரவங்களுக்கில்ல"

– **நா. சேதுக்கரசி**

அவசர உலகின்
நாகரிகச் சேவல்களே!
உங்களை,
இன்னும் மனிதர்கள்
விட்டு வைத்திருக்கிறார்கள்,
பிரியாணி செய்ய முடியாததால்!

- இரா. மிதிலா

ஆணியடித்து
மாட்டப்பட்டிருக்கிறது
காலம்!

- இரா. மிதிலா

சிறிய விழிகள் என்னை நோக்கியது
மணிபார்க்க அல்ல!
மணி நேரத்திற்கு
தீப்பெட்டி எத்தனை ஒட்டுகிறோம் என்பதை
கணக்கு பார்க்க
காம விழிகள் என்னை நோக்கியது
மணிபார்க்க அல்ல!
விலை மாதுவிற்கு
மணி பார்த்து
கணக்கு தீர்க்க

பேதையின் விழிகள் என்னை நோக்கியது
மணிபார்க்க அல்ல!
போதை புருஷனின்
அடி உதை அரைமணியில் என
கணக்கு பார்க்க

பல பார்வை
பலர் செலுத்த
நான்,
பரிதாபப்படுவதா?
பரிதவிப்பதா? அல்லது
கூனி குறுகுவதா?
என்னால் ஒன்றும் செய்ய முடிவதில்லை
நான் நின்று போவதைத் தவிர?

- த. வனிதா தேவி

தோல் சுருங்கிய பழம்
அனுபவமாய் இனிக்கும்
அது நம்மூர்க் கிழவி

வைகறையில் மக்களை எழுப்புவாள்
அவரவர் பணிகள் செய்ய

காலையிலே கேப்பக்கூழும், ஊறுகாயுமாய்
உணவு பரிமாறுவாள்
நண்பகல் கூட்டாஞ் சோறுபடைத்து
கழனிக்குக் கொண்டு போவாள்

ஏற்பாட்டில் தாயக்கட்டை ஆடுவாள்
அது ஏர் பாட்டாய் கேட்கும்

மாலையில் கலாக்காயும், கிழங்கும்
அவித்துக் கொடுப்பாள்

யாமத்திலே மட்டும் கொஞ்சம்
சொர்க்கம் போவாள்

ஆனால்!
நம்மூர்க் கிழவியிடம் கடிகாரம் இல்லை,
அவள்தான் குறிமுள் இல்லா
கடிகாரம் ஆயிற்றே!

- ப. கவிதா

# சிவப்பு ரோஜா

ஆசையுடன் ரோஜாவை எறிந்தேன் என் காதலி மீது
சற்றே முறிந்தது என் காதல்
எரிந்தது ரோஜா தொட்டியுடன்

- பி. தனசேகர்

# காதல்

காதல் என்பது
புனிதம் அல்ல,
ஒரு கணிதம்!
பெண்மனதைப்
பலவாய் வகுத்து,
காதலைப் பெருக்கி,
நாணத்தைக் கழித்து,
கனவுகளைக் கூட்டி,
கணக்கு போடத் தெரிந்தவன் - அதில்
முழுமதிப்பெண் பெறுகிறான்!

- இரா. கோகுலவாச நவநீதன்

# தோல்வி

என்னவளை நினைத்து
என் மனதில் விதைத்தேன்
காதல் விதையை! அது வளர்ந்தது
காதலாய் அல்ல
என் முகத்தில் தாடியாய்

- இரா. ராஜேஷ்

# காதல் வாரத்தில் என்னவள்!

திங்களன்று
இதயத்தைத் திருடியவள்!

செவ்வாயன்று
சென்னைக்கு வந்தவள்!

புதனன்று
புரியாத புதிராகி!

வியாழனன்று
விளங்க வைத்தவள்!

வெள்ளியன்று
வீட்டில் சந்தித்தவள்

சனியன்று
சந்திப்பைத் தொடர்ந்தவள்

ஞாயிறன்று
விடுமுறை என்று சென்றுவிட்டாள்!

- சி. சாந்த நாயகி

# கருவறைக்குள் நான்!

வானம் சிந்திய மழைத்துளி நான்
பூமியைத் தொடாமல் ஆவியாகிறேன்!.....

வயலில் விழுந்த விதைநெல் நான்
நிலத்தை ஜெயிக்காமல் புதைந்து போகிறேன்!...

செடிகள் வளர்த்த ரோஜா நான்
மலரும் முன்பே உதிர்ந்து போகிறேன்!....

இரவில் உதித்த கனவு நான்
விடியும் முன்பே கலைந்து போகிறேன்!.....

கருவில் உதித்த குழந்தை நான்
பிறக்கும் முன்பே இறந்துபோகிறேன்!...

- பி. தியாகராஜன்

# ஆசை

என் ஆசை
கொஞ்சம் அதிகமானது தான்
ஆம்!
இன்றைய சூழலில்
'தமிழை இகழ்ந்தவனைத் தாய்தடுத்தாலும் விடேன்'
என்றானே பாரதிதாசன்,
அவன் இன்றைக்குப் பிறந்திருந்தால்,
எத்தனை பேரைத் தாக்குவான்
என்று காண ஆசை!

'பெண்ணடிமை தீரும் மட்டும்' என்றானே
இங்கே 33%
நாங்கள் படும் இன்னலைக் கண்டு
எப்படி பாடுவான் என்று கேட்க ஆசை!

'வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடிய'
வள்ளலாரை
காவிரியின் பக்கம் சற்று
அழைத்துச் செல்ல ஆசை!

‘உப்பமைந்தற்றால் சிறுபுலவி’
என்ற வள்ளுவரை,
இன்றைய தம்பதியரிடம்
அறிமுகப் படுத்த ஆசை!

‘அகிம்சையில் போராடு’
என்ற காந்தியை
சற்றே, அரசியல்வாதிகளுக்கு
பாடம் எடுக்கச் சொல்ல ஆசை!

நிறைவேறாதவைகள் தான்
இவை,
இருந்தாலும் இப்படி
ஆசைப்படும் ஓர்
அபாக்ய குடிமகள்.

- அர. மீனா

# பூங்கா
## (காவடிச் சிந்து)

வானவில்லின் தோற்றமங்கும் இங்கும் - பகல்
வான்கதிரும் வீற்றிருக்கும் எங்கும் - என்றும்
தானம்செய மகிழ்ச்சியுடன் பூத்திருக்கும் பூவதுவே
தொங்கும் - தேன்
பொங்கும்

- கலை செழியன்

# அப்பாவின் பார்வையில்!

சுதந்திரமாய் ஸ்கூட்டரில் செல்ல நினைத்த
எண்ணத்தைச் சிந்தனையிலே சாகடித்து விட்டாள்!
சிக்கன் சாப்பிட முனியாண்டி விலாஸ்
போக ஆசைப்பட்டதை
அடுத்தாத்தில் விவாகமடா! என
பாட்டி மறக்க செய்துவிட்டாள்!

ஊட்டிவிட சுருக்கெழுத்தர் இருந்தும்
ஆடையெல்லாம் அழுதன!
என்னவளை நினைக்கும் போது!

சமைப்பதைப் பசிக்காக சாப்பிடுவதால்
எப்போதுமே சுவையான உணவுண்டு!
எனக்கு இன்பத்தைத் துன்பமாகவும்
துன்பத்தை இன்பமாகவும்
மாற்றக்கூடிய ‘மனமே’ வேண்டும்!

- சி. சாந்த நாயகி

# முரண்பாடு

காந்தி சிலை அருகில்
மதுக்கடை
வைக்கக் கூடாதென்று
அகற்றி விட்டார்கள்
காந்தி சிலையை

- வ. பூவண்ணன்

# நட்சத்திரங்கள்

நிலாப்பெண் நடத்தும்
இரவுப் பள்ளியில்
இத்தனை மாணவர்களா?

வானப் புற்றில் கிளம்பிய
ஈசல்கள்

கண்ணகி விட்டெறிந்த
சிலம்பின் மாணிக்கப் பரல்கள்.

- மே. ஜானகி ராமன்

# ஆடை

தலைவனுக்குத் துண்டு
போர்த்திய தொண்டனாய்
தகப்பன்!
கூட்டத்தில் கோவணத்துடன்
மகன்.

- அ. கோபிநாத்

# குழந்தை

பிறந்தபோது நீ அழுதாய்
இறந்தபோது தாய் அழுதாள்
இரண்டுமே உனக்குத் தெரியாது

- ச. அவ்வை

# என் சன்னல் வழியாக

என் சன்னல் வழியாக
நிலவைப் பார்த்து அங்கு
எப்போதுதான் போவேன் என்று
துடித்துக் கொண்டிருக்கையில்
பார்த்தேன் - சிறிதாய்
தேங்கி யிருந்த நீரில்
நிலவையும் அதில்
உலவும் அட்டை பூச்சியையும்

- கலை. செழியன்

# கிளி

கூண்டுக்கிளியாய் இருப்பதால்
ஏனோ கூட்டுப் பறவைகளைத்
தெரிய வாய்ப்பில்லை உனக்கு

கிளியே, நீ ஏன் மாறக்கூடாது?
வானை அளக்கும் வானம்பாடியாய்
சொன்னதைச் சொல்லாமல்
சுயமாய் இசைக்கும் குயிலாய்

சுதந்திரம் என்பது
சோற்றுக்காகச் சிறைப்படுவதல்ல
கூட்டுப் புழுவிலிருந்துதான்
பிறக்கிறது வண்ணத்துப் பூச்சியும்
எனவே, நீயும் ஏன் மாறக்கூடாது?

- தி. அருண்மொழிச் செல்வி

# ஒன்றும் இல்லை

தொடக்கம் என்று நினைத்தால் முடிவு
என்று ஒன்றும் இல்லை
பதில் என்று நினைத்தால் கேள்வி
என்று ஒன்றும் இல்லை
வெற்றி என்று நினைத்தால் தோல்வி
என்று ஒன்றும் இல்லை
முடியும் என்று நினைத்தால் முடியாதது
என்று ஒன்றும் இல்லை
இருக்கின்றது என்று நினைத்தால் இல்லை
என்று ஒன்றும் இல்லை!

- எம். மரியம் பெட்ரீசியா

# 21-ஆம் நூற்றாண்டில் உலகின் நிலை

எழுகின்ற இருபானோர் நூற்றாண்டே கேள்
 எம்முடைய வணக்கத்தைக் கூறுகின்றேன்
அழுகின்ற மனிதகுலத் துன்பம் போக்கி
 அமைதியிலே உலகமது தழைக்க வேண்டும்.
எழுகின்ற விளக்கினிலே வீழும் விட்டில்
 எனச்சாதி நெருப்பினிலே வீழும் மனிதம்
தனை உணர்ந்து சாதிவெறி போக்கி - நாளும்
 தலைமை பெற்று நாள்தோறும் உயரவேண்டும்.

அறிவியலில் துறைதோறும் புதுமை கண்டே
 அகிலமெலாம் சிறந்தோங்கி வாழ வேண்டும்
நெறிவாழ்வில் குறியாக நிற்றல் வேண்டும்
 நேயமது மானுடத்தில் மலர வேண்டும்
வறியநிலை இல்லாத உலகம் வேண்டும்
 வானமெல்லாம் மானுடத்தின் ஆட்சி வேண்டும்
முறியாத பேருறவு உலகம் எல்லாம்
 முகிழ்த்திடவே வேண்டுவ தென்விருப்பம் தானே!

எம்முன்னோர் எமக்களித்த உலகை யாமும்
 இயற்கைநிலை அழியாது, ஈதல் வேண்டும்
எம்முடைய சந்ததியார் இன்பம் காண
 எப்பாடு பட்டேனும் இயற்கை காப்போம்
தம்முடைய உலகென்று வல்லரசு தாமும்
 தாக்குகின்ற அணுக்கருவி நீக்கி எங்கும்
உம்மென்னும் பெருமூச்சை ஒழித்துக் கட்டி
 உலகமெல்லாம் ஓங்கிடவே அருள்செய் வாயே!

- மோ. புவனேசுவரி

ஒரு நாள் சிரித்ததற்கு

மரண தண்டனை

பாவம் மலர்கள்

- ப. கவிதா

காகிதம் நனைந்தது

கண்ணீர் முத்துக்கள்

ஓ! கவிதை!

- ப. கவிதா

கடலின் நாட்டியம்
ஏன் இன்று மட்டும்
ஓ! முழு நிலவு.

**- ப. கவிதா**

வேலை தர மறுத்த
நல்லோர்க்கு நன்றி
இன்று நான் கவிஞன்

- ப. கவிதா

சாலையைக் கடக்கும்போது
அவளைப் பார்த்தேன்
மரணம்.

- அ. கோபிநாத்

மின்மினிப் பூச்சியுடன்
ஏதோ அலைந்து கொண்டிருந்தது
எழுதுகோல்

- ப. கவிதா

# கவிதையாளர்

**எல். அப்துல் ரஷீத்**
சி.எஸ்.ஐ. எம்டி கார்லே உயர்நிலைப்பள்ளி, சென்னை.

**தி. அருண்மொழிச் செல்வி**
ஸ்ரீமத் சிவஞான பாலைய சுவாமிகள் தமிழ்க் கல்லூரி
மயிலம்

**ச. அவ்வை**
காயிதே மில்லத் அரசினர் மகளிர் கல்லூரி, சென்னை.

**அ. உபயத்துல்லா பேக்**
புதுக்கல்லூரி, சென்னை.

**ப. கவிதா**
மீனாட்சி மகளிர் கல்லூரி, சென்னை.

**ஆர். குமார்**
விவேகானந்தா கல்லூரி, சென்னை.

**ஜெ. குருமூர்த்தி**
விவேகானந்தா கல்லூரி, சென்னை

**இரா. கோகுலவாச நவநீதன்**
மாநகராட்சி ஆண்கள் மேனிலைப்பள்ளி, சென்னை.

**அ. கோபிநாத்**
கார்லே உயர்நிலைப்பள்ளி, சென்னை

**கு. சங்கீதா**
காயிதே மில்லத் அரசினர் மகளிர் கல்லூரி, சென்னை.

**மா. சண்முகவள்ளி**
செல்லம்மாள் மகளிர் கல்லூரி, சென்னை.

**சி. சாந்த நாயகி**

மாநிலக் கல்லூரி, சென்னை.

**சார்லஸ்**

அரசினர் ஆடவர் கலைக்கல்லூரி, சென்னை.

**ப. சிவக்குமார்**

மாநிலக் கல்லூரி, சென்னை.

**செ.பெ. சுபா**

ஸ்ரீ சங்கரா வித்யாசிரமம் மேனிலைப்பள்ளி, சென்னை.

**ச. சுபாஷினி**

செல்லம்மாள் மகளிர் கல்லூரி, சென்னை.

**கலை. செழியன்**

முத்தையா செட்டியார் மேனிலைப்பள்ளி, சென்னை.

**நா. சேதுக்கரசி**

ஸ்ரீ சங்கரா வித்யாசிரமம் மேனிலைப்பள்ளி, சென்னை.

**தீ. தசரதன்**

மாநிலக் கல்லூரி, சென்னை.

**பி. தனசேகர்**

விவேகானந்தா கல்லூரி, சென்னை.

**ச. தனஞ்செயன்**

புதுக்கல்லூரி, சென்னை.

**பி. தியாகராஜன்**

அரசினர் ஆடவர் கலைக்கல்லூரி, நந்தனம், சென்னை

**இ. நந்தமிழ் நங்கை**

காயிதே மில்லத் அரசினர் மகளிர் கல்லூரி, சென்னை.

நா. பவானி
மீனாட்சி மகளிர் கல்லூரி, சென்னை.

மோ. புவனேசுவரி
காயிதே மில்லத் அரசினர் மகளிர் கல்லூரி, சென்னை.

வ. பூவண்ணன்
வேதியியல் பயிலகம், சென்னை.

எம். மரியம் பெட்ரீசியா
அண்ணா ஆதர்சு கல்லூரி, சென்னை.

இரா. மிதிலா
காயிதே மில்லத் அரசினர் மகளிர் கல்லூரி, சென்னை.

அர. மீனா
காயிதே மில்லத் அரசினர் மகளிர் கல்லூரி, சென்னை.

இரா. ராஜேஷ்
புதுக்கல்லூரி, சென்னை.

ச. ரேவதி
செல்லம்மாள் மகளிர் கல்லூரி, சென்னை.

த. வனிதா தேவி
செல்லம்மாள் மகளிர் கல்லூரி, சென்னை.

இல. விக்டோரியா
காயிதே மில்லத் அரசினர் மகளிர் கல்லூரி, சென்னை.

மே. ஜானகி ராமன்
மாநிலக் கல்லூரி, சென்னை.

ஆர். ஸ்ரீதரன்
புதுக்கல்லூரி, சென்னை.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை - 600 113

## அண்மை வெளியீடுகள்

| | |
|---|---|
| தமிழக வரலாறு மக்களும் பண்பாடும் | 125.00 |
| சங்க இலக்கிய ஆய்வுகள் | 30.00 |
| தொல்காப்பிய ஆய்வுகள் | 20.00 |
| Indian Epistemology | 125.00 |
| பெ.நா. அப்புசுவாமியின் அறிவியல் கட்டுரைகள் தொகுதி-2 | 80.00 |
| தாய்நாட்டிலும் மேலை நாடுகளிலும் தமிழியல் ஆய்வு | 75.00 |
| ஜப்பானியக் காதல் பாடல்கள் | 75.00 |
| குறுந்தொகை - ஒரு நுண்ணாய்வு | 80.00 |
| உ.வே.சா. நூல்களில் சொல்லும் சுவையும் | 18.00 |
| இ.ப.த. மன்ற ஆய்வுக் கோவை 1970 தொகுதி-3 | 50.00 |
| இ.ப.த. மன்ற ஆய்வுக்கோவை 1970 தொகுதி-2 | 70.00 |
| இ.ப.த. மன்ற ஆய்வுக்கோவை 1970 தொகுதி-1 | 75.00 |
| இ.ப.த. மன்ற ஆய்வுக்கோவை 1969 தொகுதி-2 | 65.00 |
| இ.ப.த. மன்ற ஆய்வுக்கோவை 1969 தொகுதி-1 | 70.00 |
| சங்க கால மன்னர்களின் காலநிலை தொகுதி-2 | 64.00 |
| சங்க கால மன்னர்களின் காலநிலை தொகுதி-1 | 56.00 |
| இராமாயணம் - தோற்பாவை நிழற்கூத்து | 125.00 |
| லவகுச நாடகம் | 30.00 |
| அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத் தமிழ்ச் சுவடிகள் விளக்க அட்டவணை தொகுதி-4 | 110.00 |
| அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத் தமிழ்ச் சுவடிகள் விளக்க அட்டவணை தொகுதி-3 | 110.00 |
| எட்டையபுரப் பள்ளு | 60.00 |
| திருக்குறள் பூரணலிங்கம்பிள்ளை ஆங்கில மொழிபெயர்ப்பு | 100.00 |
| தொல்காப்பியப் பாவியல் கோட்பாடுகள் | 40.00 |
| இந்திய விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்கள் தொகுதி-2 | 65.00 |
| நானும் என் கவிதையும் | 40.00 |
| On Translation | 95.00 |
| ஐங்குறுநூறு மூலமும் உரையும் | 85.00 |
| தனிநாயகம் அடிகளாரின் சொற்பொழிவுகள் | 40.00 |
| Literary Criticism in Tamil and Sanskrit | 45.00 |
| செந்தமிழ் அகராதி | 150.00 |
| சொற்பிறப்பு - ஒப்பியல் தமிழ் அகராதி | 200.00 |
| தமிழ்ச்சொற் பிறப்பாராய்ச்சி | 30.00 |
| அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத் தமிழ்ச் சுவடிகள் விளக்க அட்டவணை தொகுதி-2 | 110.00 |
| பிரதிமா ஸ்வப்ன வாசவதத்தம் | 55.00 |
| அறநூல் | 38.00 |
| இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் நாடகங்கள் | 75.00 |
| பொருள் புதிது | 35.00 |
| ஆளும் தமிழ் | 28.00 |

Pub.No. 373 **பயிலரங்கக் கவிதைகள்** Rs. 18.00